உ

# விடயானந்த விளக்கம்




ஆசிரியர்

சி. சுப்பையா சுவாமிகள்

பதிப்பாளர்

M. பரிமள தண்டர் அவர்கள்

1947ஹ

உ

ஸ்ரீகணேசாய நம:

# விடயானந்த விளக்கம்.

இது
சிதம்பரம் கோ. சித. மடாலயம்
ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞானதேசிக சுவாமிகளின்
மாணுக்கர்
சி. சுப்பைய சுவாமிகளால்
இயற்றப்பெற்று




வேலூர் (சேலம்)
நஞ்சேயிடையாறு
பெருமிராசுதார்
M. பரிமள கண்டர் அவர்களால்
மதுரை நாடார் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.


சர்வசித்துஸ்ரீ சித்திரைமீ (ஏப்ரல்மீ)
1947வது வருஷம்





திருவண்ணமலை ஈசான்யமடாலயம் சி. சுப்பைய சுவாமி.

9-1

உ
சிவமயம்

# முன்னுரை

குண கடல் குமரி குடகம் வேங்கடம் எனு நான்கெல்லையில் இலங்கிய வினிய செழுந்தமிழ்க் கடலுள் திளைத்துக் களிக்கும் அறிவிற் பெரிய ஆன்றோர் கேண்மினோ!

இந்திரன் முதலிய இறையவர் பதங்களையும் அந்தமிலின்பத்து அழிவில் வீட்டையும் நெறியறிந்து அடைதற்குரிய மாந்தர்க்கு எய்துதற் குரியனவாக அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு புருடார்த்தங்களையும் பெரியோர் வகுத்துக்கூறினர். இவற்றை ஒருங்கு சேரப் பெற வேண்டி நற்பேரவாக்கொண்ட கோட்டையூர் திருமிகு செல்வர் அ. க. அ. சித. அள. சிதம்பரம் செட்டியாரவர்கள் சிதம்பரம் கோ. சித. மடாலயம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பரஞான தேசிக சுவாமிகளின் மாணாக்கர் திருவருணை ஈசான்யமடம் சி. சுப்பைய சுவாமிகளை அழைத்துச்சென்று மேற்சொன்ன அறமாதி நான்கினையும் விளக்குந் "திருக்குறளை"ச் சுவாமிகள் பால் கற்று வந்தனர். அந்நாளில் அங்கு வந்த மாபெரும் புலவரொருவரோடு உசாவும்போது காமத்துப்பாலின்பம் வினவ நேர்ந்தது. புலவர் காதலியையும் மனத்தையும் இன்பநிலைக்களமென்றனர். சுவாமிகள் அதை விளக்கிக்கூற மகிழ்ந்தார். அவ்வுரைகளை,சுவாமிகள் ஒருங்கு சேர்த்துச் சிலவிளக்க வாக்கியங்களுடன் உரை நடையாக எழுதி உபோத்காதப்பிரகரணம், விடயானந்தப் பிரகரணம் என இரண்டு பிரகரணங்களாக வகுத்து "விடயானந்த விளக்கம்" என்ற பெயருடன் இந்நூலினை அருளினர்.

அவ்விடயானந்தத்தின் உண்மைநிலை உணரப்படுமாறல் அவ்வின்பத்தின் மூலமாகவே வருத்தமின்றிப் பேரானந்தப் பெருவாழ்வைப் பெறுதல் கூடும் என்ற பெருங் கருணையே சுவாமிகள் இந்நூல் இயற்றுதற்குக் காரணமாமென்பது சிறியேனது கருத்தாகும். நிற்க,

சேலம் ஜில்லா நாமக்கல் தாலூக்கா வேலூரையடுத்த நஞ்செயிடையாறு என்னும் வளநகரில்பெருமிராசுதாரராப்

விளங்கும் திருவாளர் M. பரிமள கண்டர் அவர்கள் மேல்கண்ட வேலூரில் தாம் ஏற்படுத்தி சாதுக்களை ஆதரித்து நடத்திவரும் பரிமள ஆச்சிரமத்தில் வழக்கம்போல் வருடந்தோறும் நடத்திவரும் ஸ்ரீ சங்கர ஜயந்தி மகோத்ஸவத்தில் சுவாமிகளைக் கண்டார்கள் அவ்வமயம் நடந்த சம்பாஷணையில் இந்நூலைப் பற்றிய விவரம் அறிந்த கண்டரவர்கள் தாமே இந்நூலினை அச்சிட்டுப் பேரின்ப வாழ்க்கையில் விருப்புடையோர்க்கு ஈசுவரப் பிரீதியாக அளிக்கத் துணிவு கொண்டார்கள்.

மேலுமிவர் தமது மைத்துனர், திருவாளர் S. கந்தசாமி கண்டரவர்கள் தமது பெரும் பொருளை உயர்தரப் பள்ளி (High school) கட்டி அதன் கல்வி தானத்துக்கே உபயோகப்படுத்தவேண்டுமென்று கருதிய அவர் நற்கருத்துப்படியே அவரால் அதிகாரம் பெற்றவராய் அந்த ஹைஸ்கூல் தாபனத்துக்கு நேர்ந்த எண்ணிறந்த இடையூறுகளையெல்லாம் ஈசனருளால் விலக்கி அதனை மேற்கண்ட வேலூரிலே நிறுவி அதற்கு நிரந்தர மானேஜராக இருந்து கண்ணுங்கருத்துமாக நடத்தி வருகின்றாரென்றால் இவர் வாழ்க்கை பரோபகாரமானதே யென்பது மிகையாகாது.

இவ்வாறு இவர் சாதுக்களுக்கும் சமயத்துறைக்கும் கல்விக்கும் அரிய பெரிய தொண்டு செய்துவரு மியல்பானேயே இந்நூலை அச்சிட்டுப் பதி கல்விதானத்தையும் ஆற்றத் துணிவு கொண்டார் போலும்.

இங்ஙனம்

ந. இராமாநந்தன்

ஈசான்யமடம், திருவண்ணாமலை.

---

இந்நூல் வேண்டுவோர்:—

M. பரிமள கண்டர்
பெருமிராசுதார், நஞ்செயிடையாறு
வேலூர் (சேலம்)

என்ற விலாசத்துக்கு எழுதிப் பெறுவார்களாக.

# உள்ளுறை பொருள்

## முகவுரை

உ

நூல்

# விடயானந்த விளக்கம்

## உபோத்காதப் பிரகரணம்

### காப்பு

என்றுமுள வான்மாவி னின்புவிட யங்களிலே
யொன்றுமதே யுன்வடிவென் றோதுகின்ற=குன்றா
விடயவா னந்த விளக்கமா நூற்குக்
கடம்வழிநல் யானைமுகன் காப்பு.

### குரு வணக்கம்

உற்றவிட யானந்த முன்வடிவென் றோதுகின்ற
குற்றமிலா திந்நூலைக் கூறுதற்கு=நற்றவர்சூழ்
தில்லைச் சிதம்பரநற் றேசிகன்றன் சீரடியே
ஒல்லைமக் குற்ற துணை.

### குருவடிவங்கொண்ட பரமான்மாவி னிலக்கணம்

அகண்டமாய்ப் பரிபூரணமாய்ச் சச்சிதானந்தமாய் ஏகமாய் ஆன்மாவான தன்னினு மபேதமாய்க்கற்பித மாயா சத்தியை யுடையதாய் இருப்பது குரு வடிவங்கொண்ட பரமான்மாவாம்.

### மாயாசத்தியி னிலக்கணம்

பரமான்மாவினிடத்தில் தாம்பிற் பாம்புபோன்று கற்பிதமாய், ஆன்மாவை மறைக்கும் ஆவரண சத்தியையும், சீவேசுவரசகங்களைத் தோற்றுவிக்கும் விட்சேப சத்தியையும் உடையதாய், அநாதியாய், உள்ளது இல்லதென்று நிச்சயிக்கக் கூடாததாய், பாவ (உள்ள) பதார்த்தமாய் இருப்பது மாயாசத்தி யென்னுந் தெய்வ மாயையாம்.

இதற்குப் பிரகிருதி, பிரதானம், அவித்தை, அஞ்ஞானம், சத்தி என்பன முதலிய பெயர்களுமுண்டு.

சீவேசுவரசகத் தோற்றம்

பரமான்மா, மாயாசத்தியின் வசத்தால் கடல், வாயுவினால் அலை, திவலை, குமிழியாவதுபோல, சீவேசுவரசகங்களாய் விளங்குகின்றது. இதனை "ஒருவனாக இருக்கும் நான் அநேக பிரசைகளாவேனாக" "இந்திர ரூப பரமான்மா மாயைகளால் அநேகவடிவமானது" என்று சுருதிகளும் "ஒன்றாயுலகனைத்துமானார்தாமே" என்று தேவாரமும்,

காலமுங் கன்மந் தானும் பரிபாகமான வாறே
ஞாலமுண் டாக்க நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலதொன்றில்லா விந்தச் சத்திமான் படைத்தற்காக
ஏலவேயெல்லா மாவோ மென்றுகொண்டிசைந்துபார்த்தான்

என்று பிரம கீதையும் கூறுகின்றன.

ஈசுவரனிலக்கணம்

மாயையோடுங் கூடினவனாய், நித்தியமான இச்சாஞான கிரியைகளையும், உலக சிருட்டி திதி சங்காரங்களைச் செய்யுங் கருத்தாவாந்தடத்த இலக்கணத்தையும், சச்சிதானந்தவடிவ சொரூப இலக்கணத்தையும், சர்வஞ்ஞத்துவாதி கல்லியாண குணங்களையும் உடையவனாகவிருப்பதே ஈசுவரனிலக்கணம்.

சீவரிலக்கணம்

சீவர் அவித்தையோடுங் கூடினவராய், அநித்தியமான இச்சா ஞானகிரியைகளை யுடையவராய், அசர்வஞ்ஞராய், அநீசுவரராய், பிராணதாரணஞ் செய்கின்றவராய், சுக துக்கங்களில் மூழ்கி, சமுசாரிகளாகவிருப்பதே சீவரிலக்கணம்.

### தடத்த சொரூப லிலக்கண திட்டாந்தங்கள்

ஓர் காலத்து ஓரிடத்திருந்து இலக்கியத்தைப் பிறவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது தடத்த இலக்கணம், அது காகமுடையது தேவதத்தன் வீடென்பது போலவாம். மூன்று காலத்திலுஞ் சொரூபமாக இருந்து இலக்கியத்தைப் பிறவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது சொரூப இலக்கணம், அது ஒளியுடையவன் சூரியன் என்பது போலவாம்.

### ஈசுவரன் சீவர்களுக்குத் தனுகரண புவனபோகங்களை யுண்டாக்குவதற்கும் அவற்றின் வேறுபாட்டிற்குங் காரணங் கூறல்

ஈசுவரன், சீவர்களின் மனதிலுள்ள பாவனையென்னும் வாசனை, கண் முதலிய விந்திரியக் காட்சியென்னும் ஞானம், புண்ணிய பாவமென்னு மதிருட்டம் என்னுமிவற்றை நிமித்தமாகக்கொண்டு இன்ப துன்பமென்னும் போகங்கள் விளங்குவதற்கிடமான தேவ மனுட மிருக பட்சி ஊர்வன நீர் வாழ்வன தாவரமென்னும் எழுவகைச் சரீரங்களையும் அவைகளுக்கு அமுதம், சாதம், பால், புல், மாமிசம், நீர் மண் முதலான உணவுப் பொருள்களையும் உறைவிடமாகப் பூலோக முதலிய பதினான்கு உலகங்களையும் தன் சத்தியோடுங் கலந்து நின்று அச் சீவர்களுக்குக் கருமானுசாரமாக, சிருட்டித்தருளினன்.

### புண்ணியபாவ மிசிரங்களும் அவற்றின் நிமித்தமும், பயனும்

சீவர்களுக்குப் பொதுவான ஈசுவர நாமஜபம், துதி, தியானம், மானசபூசை முதலிய தருமங்களைச் செய்தலால் இன்பத்துக்கே காரணமான சுக்கில (வெண்மை) கருமமென்

னும் தனிமையான புண்ணியத்தையும், மதுபானம், சீவ இம்சை, பரஸ்திரீகமனம், சூதுமுதலியவற்றைச்செய்தலால் துன்பத்துக்கே காரணமான கிருஷ்ண (கருப்பு) கருமமென்னும் தனிமையான பாவத்தையும், நடை கிணறு, கிணறு, குளம் முதலிய நீர் நிலை களை வெட்டுதல், அன்னதானம் வஸ்திரதானம் முதலியவற்றைச் செய்தல், நந்தனவனம் தோப்பு சாலை முதலியவற்றை வைத்தல் என்னு மிவைகளால் கலப்பான இன்ப துன்ப அனுபவத்துக்குக் காரண மான சுக்கில கிருஷ்ண கரும மென்னும் மிசிரமா (கலப்பா)ன புண்ணிய பாவத்தையும் அந்த கோலாங்கூல நியாய (குருடன் மாட்டுவால் பற்றிச் சென்ற திருஷ்டாந்த)ப்படி சேர்க்கைப் பழக்கங்களால் செய்து வருகின்றனர். அவற்றால் பிறப்பு ஆயுள் போக மென்பற்றை ஏற்றத் தாழ்வாகப் பெற்றுச் சிற்றின்பத்திற் சிக்குண்டு ஆற்றுச் சுழலிலகப் பட்ட புழுப்போலச் சுதந்தரமற்றவர்களாய் அவற்றாற் றுன்புறுகின்றனர்.

## அனைவரும் மோட்சத்தை விரும்பும் முமுட்சுகளேயாவர்

சீவர்கள் அவ்வாறு துன்பமடையினும் சிறிதுந் துக்கங்கலவாத என்று மழியாததோரின்பத்தையுமடைய வேண்டுமென்ற மாறுதவெண்ண முடையவர்களாயிருக்கின்றனர். இவ்வெண்ணத்துக்கு "சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப்பிராப்தி" என்னும் நித்திய மோட்ச சுகமே விடயமாகின்றது. இதனால் ஒருவிதத்தில் அனைவரும் மோட்ச விருப்பமுடைய முமுட்சுக்களாகவே யிருக்கின்றனர்.

முமுட்சுத்துவம் பயன்படுதற்கேது

சீவர்கள் ஈசுவரன், குரு, சாத்திரம், மனம் என்னு மிந்நால்வர் கிருபையால் ஆன்மாவான தம்மினும் அபேத மான நித்திய சுக வடிவ பரமான்மாவை அது நானாகவிருக் கின்றேனென்று ஐயந்திரிபுகளின்றி அபரோட்சமாக அறி வார்களேயாயின் அப்போது அழியாச் சுகத்தை யடைய வேண்டுமென்ற அவர் *முமுட்சுத்துவம் முற்றுப் பெறும்.



ஆன்மா

ஆன்மா; நாம ரூபமனைத்தும் வியாபித்து முடிவில் அவற்றைத்தனக்குளடக்கிக் கொள்வதாயும் நிமித்தமின்றி யுண்டாகும் மாறுதபிரியத்துக்கு விடயமாயும் சச்சிதானந்த அத்தவைத விக்கணமுடையதாயும் மூன்றவத்தைகளுக்கும் சாட்சியாயும் இருக்குந்தானென்பதாம்.

பிறப்புத்துன்ப மய மேனல்

சீவர்கள் பரமான்மாவை விசாரித்தறிந்தடையாரேல் அவர்க்குப்பிறப்புத்துன்பங்கள் ஒருகாலத்தும் ஒழியாவாம். இதனை

தோன்றிநின் றழியப் படுங்கொடும் பிறப்பிற்
றுன்பமே யன்றியெட் டுணையும்
ஊன்றிநெஞ் சகத்தோர்ந் திடிற்பிறி திலையால்.

என்று வைராக்கியதீபமும்,

பாலகனு யஞ்ஞானத் தழுந்துவன்கற்
காளையாய்ப் பாவை மாராற்
சாலவருந் துவன்விருத்தன் றுனுகிக்
குடும்பத்தாற் றளர்ந்துசாவன்.

என்று வாசிட்டமுங் கூறுகின்றன.

*முமுட்சுத்தவம் =மோட்ச இச்சை.

அவதார முடையோர்க்கும் உடம்பு துன்பகாரண மேனல்

ஈசுவர அவதாரமான இராமகிருஷ்ணதிபரும் உடம்பெடுத்த காலத்தில் அன்னாரடைந்த துன்பத்துக்கோர் அளவேயில்லை. இதற்குக் காரணம் உடம்பேயாம். இவர்களுக்கே யிவ்வாறாயின் அஞ்ஞானமுடைய ஏனைய சீவர்களின் கதியென்னும். இதனை "சரீரத்தையுடைய உயிர்க்கு இன்ப துன்பங்களின் விடுபாடில்லை" என்று சுருதி கூறுகின்றது.

ஞானியஞ்ஞானிகளுக்கு இன்பதுன்பானுபவத்தில் வேறுபாடு

அவதாரமுடைய ஞானிகளும், மானுட ஞானிகளும் இன்பதுன்பங்களை உட்கருவியானமனம் அனுபவிக்க, தாம் சாட்சி மாத்திரமாக விருக்கின்றனர். இதனை

காணுங் கேட்கு முறுமோக்குங் காலா னடக்குங் கண்வளரும்
பேணுந் துறங்கு மூச்சுவிடும் பேசும் விழிக்கும் சிம்பிளிக்கும்
பூணு மின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின் [புணர்ப்பென்றே
தூணுங் கிரியு மெனவொன்றுந் துளங்கான் விளங்குந் [துணிவுடையோன்.

என்று பகவத்கீதையும்,

"விம்முசுக துக்கமனம் மேவுமென்று சொன்னவரோ"
"பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்
வசிகோபம் மதிக்கெனவே மகிழ்ந்திருப்பாரென்றவரோ"

என்றும் கீதாசார தாலாட்டுங் கூறுகின்றன. ஞானமில்லாதவர்களோவெனின் வான்போன்று தேக முதலியவற்றோடுச் சம்பந்தமற்ற அவஸ்தாத்திரய சாட்சியான ஆன்மா அனுப

விப்பதாகவும் அச் சுகதுக்கங்கள் விடயங்களினின்றும் வந்தனவாகவும் தாங்களே போக்தாக்களாகவுங்கண்டு அனுபவிக்கின்றனர். இதுவே ஞானியஞ்ஞானிகளுக்கு இன்பதுன்பானுபவத்திலுள்ள வேறுபாடு. இதனால் உடம்பெடுத்த எவர்க்கும் இன்பதுன்பம் போகாவென்பது கருத்து.

மோட்சமடையாதோ ரிழிவு

"ஈண்டறிந்தானாயின் சத்தியமிருக்கின்றது ஈண்டறியானாயின் பெரிய நஷ்டமுடையவனாவன்" என்று சுருதியும்

மானுட வாக்கை யென்னும் மருவருந்தோனி பெற்றும்
ஊனமில் குரவன் சொல்லா மோடமுய்ப் பவனே டென்சீர்
ஆனதோ ரனுகூலக்கா லனுகவும் பிறவி வேலை
தாணெழி தரவெண் ணுதான் றன்னையே கொல்கின்றானும்.

என்று பாகவதமும்,

மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்
டந்தோ தன்மெய்யை யரிந்தான் போன்ம்=இந்தவுடல்
கொண்டுமுத்தி செல்லுங் குறிப்பின்றிச் சிற்றின்பங்
கண்டுவினைக் காளாங் கணக்கு.

என்று ஆனந்தத்திரட்டும்,

அடையவேண் டியதடைந் துமேற்றுயா
மற்றின்ப மளவி லாதாய்க்
கடையதாந் தருவிலங்கு பறவைகள்போல்
வீணாள்கள் கழியா தாகித்
தடையிலா மனனத்தால் வாழ்வதே
யுயர்வாணாள் சனனந் தீர்ந்தோ
ருடைய பிறப் புயர்ந்ததாங் கிழவே
சரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம்.

என்று வாசிட்டமும் அவ்விழிவைக் கூறுகின்றன.

### சுழுத்தி விருப்பம்போல முத்தி விருப்பங் கூடுமேனல்

சுக சாதனமான மாலை, சந்தன, மாதராதி யாதொரு பொருளுமில்லாத விதேக மோட்ச சுகத்தில் விருப்பமுண்டாமோ வெனின் அற்றன்று சுக சாதனமான யாதொரு பொருளும் வேண்டாத சுழுத்தியவஸ்தையில் விளங்குஞ் சுகத்தில் விருப்பமுண்டாவது போல விதேக மோட்ச சுகத்திலும் விருப்பமுண்டாமென்க. பொருள்களை மறந்த விடத்திலேயே சுகானுபவ முண்டாவது அனைவருக்கும் வெளிப்படையேயாகும். இவ்வனுபவ விளக்கத்துக்கு நிட்காம கருமானுட்டானத்தாலான மனத்துாயமையே முக்கிய காரணமாகும்.

### கருமயோக தியானயோக ஞானயோகங்களின் இலக்கணமும் அவற்றின் பயனும்

அரிய மானுட வாக்கையைப் பெற்ற சீவர்கள் முதலில் காலை ஸ்நானம், ஈசுவர நாமஜபம், துதி, ஆராதனை, ஆலய சேவை, குரு வழிபாடு, உண்மை பேசல், பிரமசரியம், சிவகாருணியம், பரோபகாரம் முதலியவற்றைப் பலனில் இச்சை விட்டுச் செய்தலான கருமயோகத்தை யனுட்டித்து அதன் பயனாக நியாய விரோதமான காம வெகுளி மயக்க மென்னும் கன்ம மலமாகிய தீய குணங்கள் உண்டாகாத விலக்கணமுடைய மனத் துய்மை பெற்று; பிறகு சகுண பரமேசுவரனைச் சிந்தித்தல் வடிவ தியான யோக மென்னும் உபாசனையை யனுஷ்டித்து அதன் பயனாக மனத்தின் விட்சேப மலமாகிய அசைவு நீங்கப் பெற்று; அம்மனத்தால் பொருள்களைப் பகுத்தறிதலான நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய நான்கு சாதனங்களும்

பூரணமாகச் சித்திக்க அதனால் சத்குருவைச் சரணமடைந்து அவர்பால் சுரோத்திர சம்பந்தி மகா வாக்கிய உபதேசம் பெற்றுப் பிரமாண சந்தேகம், பிரமேய சந்தேகம், விபரீத பாவனை, நீங்கும் பொருட்டு வேதாந்த நூல்களைக் கேட்டல், சிந்தித்தல், தெளிதலாகிய சிரவண மனன நிதித்யாசன மென்னும் ஞான யோகத்தையும் அப்பியாசஞ் செய்து அதன் பயனாகத் தன்னை மறைத்திருக்கின்ற ஆவரண மலமென்றும் மூலாஞ் ஞானத்தை நாசஞ் செய்யும் "பிரமமாக நானிருக்கின்றேன்" என்று உட்கருவியிலுதயமாகும் விருத்திவடிவ திட அபரோட்ச தத்துவஞானத்தையடைந்து அதனால் "சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி" என்னும் மோட்சத்தையு மடையவேண்டியது ஒரு தலையேயாம். இதனை

மடல்வி ரிந்த மரைமலர் வைகுவோன்
சடம ளைத்தையுந் தந்து முவந்திலன்
இடா றுக் குமென் றெண்ணிநன் மானுட
உடல்ப டைத்தபின் ஞேகையுற் றனரோ.

என்று பாகவதமும்,

ஒன்றுகேண் மகனே புமான் முயற்சியா
லுறைத்து மானுடர்க் கீசன்
நன்று செய்யவே காட்டிய நூல்வழி
நடந்து நல்லவர் பின்னே
சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச்
செனித்த மாயையைத் தள்ளி
நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போம்
நிச்சய மிது தானே.

என்று கைவல்லியமும்,

பொன்றவினித் தியகருமா னுட்டானந் தன்னாற்
புண்ணியமப் புண்ணியத்தாற் பாவவொழி வதனாற்
குன்றலறு சித்தசுத்தி யதனாற் பொய்க்குடும்பக்
குற்றநிகழ் வதனன் மெய்த்துறவு துறவதனால்.

முத்திவிருப் பதனானே புறக்கரும வொடுக்க
மொழிந்ததனால் யோகநிலை முயற்சியது தன்னாற்
பொய்த்தலறு துரியவிழை வத்துரிய விழைவாற்
புகலருமா வாக்கியவா ராய்ச்சியத னானே

அத்துவித ஞானமத னலவிச்சை நாச
மதனாற்பொய்த் துவிதமயக் கழிதலத னானே
மெத்துசுக துக்கவினை வொழிவதனால் விருப்பு
வெறுப்பறுத லதனாலொண் விதிவிலக்கோய் வதனால்.

வினையிரண்டு மகறலத னாற்றேக பாவ
விச்சிந்தி யதனானே பாசமெலா மொழிதல்
பினையறைந்த வதனானே பராபரமாய் முடிவாய்ப்
பெயர்சாதி குறிபெறு தொன்றாகி வாக்கு

மனமிறந்து நித்தியா னந்தமய மாகி
மறிவிலா விதேககைவல் லியம்வந் தெய்து
மெனவறிந்து துணிந்திடுக சுருதிகுரு பரனு
லின்பவீ டடையுநெறி விரும்புறு முத் தமனே.

என்று வேதாந்த சூடாமணியுங் கூறுகின்றன.

இவ்வாறுவீடடையு நெறியை முறையாக வேதாந்தங் கூறு மேனும் விசார மாத்திரமே ஞான காரணமாகு மென்றுங் கூறுகின்றது.

தத்துவ ஞானத்துக்கு விசாரமே முக்கியமெனல்

ஞான சாதன முழுவது மிலதேனும் விசாரத்தாற் றெளிந்து கூர்மையான புத்தியினல் ஆழ்ந்து நிலைத்து நாம ரூப வுலகமில்லாததென்றும் உண்மையறிவானந்த வடிவ

பரம்பொருளொன்றே நித்தியமானதென்றும் விவேகத்தாலாராயின் வானினின்றும் பழங் கிடைக்தாற் போலத் திடீரென்று ஆன்மஞானந்தோன்றுவதுமுண்டு. இதனை

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான்
பெரும்பேறு பெற்றதல்லால்
வாசியுள மறறொன்றால் வந்ததல்ல
வாரிச மலர்க் கண்மாலே
ஆசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான
விசாரத்தா லடைவ தல்லாற்
றேசிகரில் லாவினர் செய்தொழிலாற்
பெறலாமோ சிற்சொ ரூபம்.
மயலின்மை சாதனை நூற் பொருட்போதங்
குருயமமாம் வழிகளாலே
உயர்பதவி பெறலாகு மன்றியுணர்
வொன்றிணு னுறுதற்காமால்
இயனுபதேசம் பெற்றுக் கூரியதாய்க்
களங்கமிலா திருக்குமாகில்
வியனுறுசா தனமுழுது மிலதேனும்
புந்தியினால் வீடுகூடும். என்று வாசிட்டமும்,
இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி
லிடைவிடா விசாரத்தால்
வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின்
மனுதியாஞ் சரீரத்தில்
இந்த நானெவன் சித்தெது சடமெது
விரண்டுமொன் றுக்கூடும்
பந்த மேதுவீ டேதென வுசாவுதல்
பகர்விசா ரமதாகும்.

என்று கைவல்லியமும் கூறுகின்றன இவ்வாறு விசாரமாத்திரத்தாலடையத்தக்க ஆனந்த வடிவ பரமான்மா விடயானந்தமாகவும் விளங்குகின்றமையின் இனி அதன் விசாரங் கூறப்பெறும்.

## ஆராய்ச்சிக்குரிய எண்வகையானந்தங்கள்

சாங்கியயோகமென்னும் ஆராய்ச்சிக்கு விடயமாக ஆனந்த வடிவ பரமான்மா விடயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், ஆன்மானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், அத்துவிதானந்தம், வித்தியானந்தம் என்று எண் வகையானந்தங்களாய் உபாதியினால் விளங்குகின்றதென்று பெரியோர்கள் வகுத்துக் கூறினார்கள். இவற்றிற்கு முறையே மாலை, மணி, மாதர், தனம் முதலிய இஷ்ட வஸ்துக்களைப் புண்ணிய வசத்தாற் பெற்று அனுபவிக்கும்போது உட்கருவியென்னும் அந்தக் கரணத்திலுண்டாகும் சத்துவ விருத்தியில் பிரதி விம்பிக்கும் சுகம் விடயானந்தம். சுழுத்தியவத்தையில் சுபம்பிரகாசமாகத் தோன்றுஞ்சுகம் பிரமானந்தம். சுழுத்தியினின்று நனவையடைந்தவர்க்குச் சுழுத்தியிலனுபவித்த சுகங் கொஞ்ச நேரந் தொடர்ந்திருக்கும் அது வாசனானந்தம். எல்லாப் பொருள்களிலும் வைத்த பிரியத்தினும் என்னிடம் வைத்த பிரியம் மாறாதது என்னும் விவேகத்தாற்றோன்றுஞ்சுகம் ஆன்மானந்தம். மனத்தின் எண்ணங்களைத் தடுத்தலாகிய யோகத்திற்றோன்றுஞ் சுகம் முக்கியானந்தம். விருப்பு வெறுப்பில்லாத உதாசின காலத்துத் தோன்றுஞ்சுகம் நிசானந்தம். அசத்து சட துக்க வடிவமான உலகத்தைப் பொய்யென்று கண்டு விட்டுச் சச்சிதானந்த சொரூபமான தன்னை நாடும் விவேகத்திற்றோன்றுஞ் சுகம் அத்துவிதானந்தம், "தத்துவமசி" மகா வாக்கிய விசாரத்தால் ஐயந்திரிபுகளின்றியுதயமாகும் சீவேசுவர ஐக்கிய ஞானத்தாற்றோன்றுஞ்சுகம் வித்தியானந்தம் என்பன பொருள்களாம்.

## புண்ணியத்தாற் றோன்றுததும் தோன்றுவனவுமாகிய ஆனந்தங்கள்

சுழுத்தியவஸ்தையில் அனுபவிக்கப்படும் பிரமானந்தம் புண்ணியமாகிய அதிருட்டத்தால் தோன்றுவதன்று ஆனால் அது இயற்கையாக, பலனைக் கொடுக்க எதிர்முகப் பட்ட புண்ணிய பாப ஒய்விலுண்டாகுஞ் சுகம். ஆகையாற் றான் சகல பிராணிகளும் நாடோறும் சுழுத்தியில் புண்ணியமாகிய நிமித்தமின்றி யதை யனுபவிக்கின்றனர். விடயானந்தங்களோவெனின் புண்ணியமாகிய நிமித்தத்தாலாவன வாம் ஆகலின் அனைவரும் அவற்றைப் பெறுவதற்குப் புண்ணியத்தைத் தேடுகின்றனர்.

## விடயானந்தம் மோட்சத்துக்கு வழியெனல்

மந்தரும் விடயானந்தத்தின் உபாதியான உட் கருவியின் சத்துவ விருத்தி முதல் ஏனைய தேகேந்திரிய உலகனைத்தும் கனவுபோல் பொய்யே உண்மை யல்லவென்று தள்ளிவிட்டு ஆனந்த மாத்திரந் தம் சொரூபமென்று தெளிந்து தம்மை மோட்ச சொரூப பிரமானந்தத்தில் ஐக்கியஞ் செய்ய இவ்விடயானந்தம் வழியாகவிருக்கின்றதென் பதை ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் முதலியோர்கள் கூறினர்கள். இதனை "புண்னிய மிகுதியால் ஒரொருவருக்கு விடய சம்பந்தமான சுகமும் சித்தம் பரமான்மாவில் உபசாந்தியடைவதற்கு நிமித்தமாகும்." என்று வாசிட்டம் மாவலி கதை 11வது பாட்டு சம்சாரதரணி அவதாரிகையுங் கூறுகின்றது.

---

மந்தரிலக்கணம்

ஈண்டு மந்தரென்டவர் யாவரோவெனின் சகலவேதாகம புராண இதிகாச முதலிய நூல்களைத் தெளிவாகக் கற்றுணர்ந்தும் அவற்றைப்பிறர்க்கு நன்குரைத்தும் வைதிகலௌகிக கருமங்களை வழுவறச் செய்தும் சிவ விஷ்ணு முதலிய தேவதைகளை யாராதித்தும் தம்மை ஆனந்த வடிவ பரமான்மாவாக உணராமல் அசுத்தமாய்த் துக்கமாய் அனித்தியமாயிருக்கும் மயாகாரியமான மாலை சந்தன முதலிய விடயங்களிலேயே சுகமிருக்கின்றதென்று உறுதிகொண்டிருப்பவரே யாவர். இவர்க்கு உண்மை ஞானமுதயமாதற் பொருட்டு இவர்கொண்ட விடய சுகத்தின்சொரூபம் ஆராயத்தக்கதே.

விடய சுகத்தின் பதினொருவித சங்கையின் மறுப்போடு அச்சுகம் அறிவிக்கப்படுகின்றது

மாலை, மணி, மாதர் முதலிய விடய லாபங்களாற் காணப்படுஞ் சுகம் 1 அவ்விடயங்களின் * தருமமா? அல்லது 2 உட்கரணத்தின் தருமமா? அல்லது 3 புண்ணியத்தின் தருமமா? அல்லது 4 அனுபவிப்போனாகிய போக்தாவின் தருமமா? அல்லது 5 தேசத்தின் தருமமா? அல்லது 6 காலத்தின் தருமமா? அல்லது 7 அஞ்ஞானத்தின் தருமமா? அல்லது 8 ஞானத்தின் தருமமா? அல்லது 9 புறக்கரண அசைவு வடிவ தொழில்களின் அபாவ வடிவமா? அல்லது 10 துக்கத்தின் அபாவ (இன்மை) ரூபமா? அல்லது 11 ஆன்மாவின் தருமமா? இவற்றுள்முதற்பட்சமன்று ஏனெனின் மாலை முதலிய விடயங்களின் இலாபத்தால்

* தருமமென்பன ஒரு பொருளைப் பற்றியே நிற்கும் வெண்மையாதி உருவம், சலனாதி கிரியை இவைபோன்றவைகள்.

முற்கணத்திற்போலப் பிற்கணத்திற் சுகங் காணப்ப டாமையான் அற்றேல் அவற்றிலுள்ள சுகந் தடையாற் றேன்றவில்லையெனின் அற்றன்று அவ்வாறு தடைசெய்யுங் கெட்ட வூழிருப்பின் முற்கணத்திலுஞ் சுகந்தோன்றுதொ ழியவேண்டுமாகலானும், ஆகவே அவ்வாறு என்றுங் கெட்ட வூழாற் றடுக்கப்பட்ட சுகமுடைய இஷ்ட விடயம் இல்லா மையானுமென்க. 2வது, பட்சமுமன்று ஏனெனின் உட் கரணமிருந்தும் விடயந் தோன்றுதபோது சுகமுதயமாகா மையானென்க. 3வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் புண்ணிய கருமத்தின் காரியமாக வுண்டாகுமாகலின் அப் புண்ணியத்தின் தருமமாதல் பொருந்தாமையான் பொருந் தினல் புண்ணியந் தோன்றிய அடுத்த கணத்திலேயே, நெருப்புண்டாம்போது அதன் தருமமான சூடு தோன்று வதுபோல சுகமுண்டாகவேண்டலானென்க. 4வது, பட்ச முமன்று ஏனெனின் அனுபவிப்போனுகிய போக்தாவுக்குச் சுகம் எப்போதுங் காணப்படாமையானென்க. 5வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் தேச தருமமாயின் சுகத் தைவிரும்புவோர் இவ்விடம் விட்டுச்சுவர்க்கலோகத்துக்குப் போகவேண்டாமாகையானும் சுவர்க்கதேசத்துள்ளார்க்கும் துக்கமுண்டென்று நூல்களில் கேட்கப்படலானுமென்க. 6வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் கால தருமமாயின் கால தருமமான குளிர் வெப்பம் போன்று அது எல்லா (பிராணி) இடத்துமிருக்க வேண்டுதலினென்க. 7வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் அஞ்ஞானத்தின் தரும மன்று, பொருளின்போக்கியத் தன்மை அறியப்படாமை யாகிய அஞ்ஞானமிருக்கும்போது சுகங் காணப்படாமை யான். அப்போது காணப்படின் அஞ்ஞானமனுதியாகலின்

அஃதுள்ள காலமெல்லாம் சுகமும் விளங்கவேண்டுமாகலின் என்க. 8வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் ஞானத்தின் தருமமன்று இப்பொருள்அழகானதென்று விராக்தருக்குண்டாகும் ஞானத்திற் சுகந்தோன்றாமையான் என்க. 9வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் அசைவு வடிவ தொழில்களின் அபாவ (இன்மை) ரூபமன்று கனவில் புறக்கரண தொழில்களுக்கு அபாவமிருந்தும் சுகங் காணப்படாமையானும் உண்ணலாதி தொழில் நிகழும்போது சுகங்காண்டலானும்என்க. 10வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் துக்காபாவ சொரூபமன்று துக்காபாவமுடைய மண்ணுங்கட்டியில் சுகங்காணப்படாமையான் அற்றேல் அம்மண்ணுங்கட்டி அறிவுடையதாகாமையான் சுகந் தோன்றவில்லையெனின் அற்றன்று துக்கமற்ற புத்தியில் சுகங்காணப்படாமையான் விசாரமற்ற மந்தரால் துக்காபாவமே சுகமென்று யாதொன்று சொல்லப்பட்டதோ அஃதின்று சுகம் விளங்கும் பாவ (உள்ள)பதார்த்தமாக விருததலின் அதற்கு அபாவ (இல்லாமை) வடிவம் பொருந்தாமையான். பசுவையொத்த இவருக்கு உறக்கத்தில் பிரமாணமாகிய அளவைகளுக்கு எட்டாத சுகம் அனுபவமாகாததன்று. மற்றோ அனுபவமேயாம். இது இவருக்கு அளவையால் விளங்காமையால் சுகம் அபாவவடிவமென்று சொல்லப்பட்டது. ஆனாலது உள்ளவடிவமாம் என்க 11வது, பட்சமுமன்று ஏனெனின் சுகம் ஆன்மாவின் தருமமன்று ஆன்மாவின் சொரூபம். தருமமாயின் தருமம் கூடினும் விடினும் தருமியை வேறுபடுத்திவிட்டழிதல் ஒருதலையாதலின் அத்தரும நாசத்தால் ஆன்மாவும் நாசமாதல் வேண்டலான்.

அற்றேல் சுகம் ஆன்மாவின் சொரூபமாயினும் அது ஒரு கணத்தில் அழிந்துபோவதால் சொரூப வடிவ சுகமழியும் போது ஆன்மாவுமழியுமேயெனின் அற்றன்று "வானம் போல எங்கும் பரந்துளதும் நித்தியமும்" என்றசுருதியும்

பொன்றுவ துடப்பதனு ணின்றபொருள் பொன்று
தென்றுமொ ரியற்கையொடு நிற்குமியல் பைக்கேண்
முன்றொடர் மகப்பருவம் விட்டிளமை மூப்போ
டொன்றுமுட லாயினுமுயிர்க்கியல்ப தன்றால்.

ஊறுபடவொன்றினு ளேபிறத்தல் பிறந் துளவாதல்
வேறுபட வளர்தல் வளர்ந் தபலொன்றாய் விளிந்தமை
மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற [தன்
வாறியல்பு முடம்பன்றி யறிவடையா வாதலினால்

என்று பகவத்கீதையும் ஆன்மாவை நித்தியமென்று கூறுகின்றபடியால் ஆன்ம சொரூப வடிவ சுகமும் நித்தியமென்று சித்தித்தலான் என்க. மேலும் எவ்வாதிகளும் ஆன்மாவை யனித்தியமென்று கூறுவதில்லை. கூறின் தாம் செய்யாத புண்ணிய பாவம் தம் அனுபவத்துக்கு வருதலும் செய்தது அனுபவமின்றி அழிந்துபோதலுமாகிய "அகிருதாப்யாகமம் கிருதவிப்ரணாசம்" என்னும் இரண்டு தோடங்களும் வரும். ஆகலின் ஆன்மா நித்தியம் என்றுகொள்க.

துக்கம் ஆன்ம சொரூபமென்பதுபற்றிச்சங்கை சமாதானங்கள்

அங்ஙனமாயின் சுகம் எங்ஙனம் ஆன்மாவின் சொரூபமாமோ அங்ஙனமே துக்கமும் ஆன்மாவின் சொரூபமாக வேண்டும் எனெனின் யான்சுகி, யான் துக்கி என்று சுகதுக்க விருத்திகள் ஆன்மாவொன்றையே விடயம் பண்ணுவதாகக் காணப்படுகின்றமையாலெனின் அற்றன்று யானிறந்தே

னென்பதுபோல யான் துக்கியாகவிருக்கின்றேனென்ற எண்ணம் திடமோக காரியமாய்ப் பொய்யாகவே பொருந்துகின்றபடியால். அஃதெங்ஙனமெனின் மிக்க பிரியத்துக்கு விடயமான புத்திரனிறந்துழி யானிறந்தேனென்று ஒருவன் சொல்லுகின்றான் அது மோகத்தாலுண்டான அத்தியாசமேயல்லாமல் அவனிறந்து போனானில்லையன்றோ? அங்ஙனமே ஒருவன் யான் துக்கியாகவிருக்கின்றேனென்று சொல்லுவதும் துக்கவடிவ விருத்தியைத் துக்கத்துக்குச்சான்றான ஆன்மாவில் மயக்கத்தாலேற்றிக்கூறுவதால் பொய்யேயாம். துக்கம் ஆன்மாவின் சொரூபமானால் கருவிகரணங்களிறந்த தூக்கத்திலும் அது விளங்கவேண்டும் சுகமாய்த் தூங்கினேனென்று சுகம் விளங்குவதுபோல அது விளங்காமையால் துக்கம் ஆன்மாவின் சொரூபமன்று. அன்றியும் துக்கம் ஆன்மாவின் சொரூபமானால் உயிரோடிருக்க எவரும் விரும்பமாட்டாரன்றோ? இதனை "இவ்வாகாசவடிவ ஆனந்தமில்லையென்றால் எவன்றான் சீவிக்கவிரும்புவான்" என்று சுருதி கூறுகின்றது. ஆகையால் சுகமே ஆன்மாவின் சொரூபம் எனக்கொள்க.

### ஆன்மா, சுகவடிவென பிரத்தியட்ச, அனுமான, சத்த, அருத்தாபத்திப் பிரமாணங்களைக் கூறுதல்

சுகமே ஆன்மாவின் சொரூப மென்பதில் சுகமாய்த் தூங்கினேன் என்னும் பிரதட்சயங்கொண்டு பிரத்தியட்சப் பிரமாணமும்; ஆன்மா சுகவடிவம், சுழுத்திய வஸ்தையில் சுகமாத்திரமாய் விளங்கினமையின், மனோவிருத்திகள் இலயமாயிருக்கும் சமாதி யவஸ்தையில் போல என்று உடன்பாட்டினும், ஆன்மா சுக சொரூபம் நிரதிசயப் பிரேமைக்கு (எல்லாவற்றின் பிரியத்தினும் அதிகப்பிரியத்துக்கு)

விஷயமாகின்றபடியால், எது சுக சொரூபமன்றோ அது நிர திசயப் பிரேமைக்கு விடயமுமன்று குடம்போல என்று எதிர்மறையினுமுள்ள அனுமானப் பிரமாணமும்; ஆன்மா சச்சிதானந்த ஏகரச சொரூப மென்பதில் "இது திரண்ட சத்து, திரண்டசித்து திரண்டஆனந்தம்" என்னுஞ் சத்தப் பிரமாணமும்; அதிகாரிகளின் மோட்சப்பிரவிருத்தி ஆன்மா சுக சொரூபமாக விருந்தாலன்றிப் பொருந்தாதென்னும் அருத்தாபத்திப் பிரமாணமும் அளவைகளாயுள்ளன.

துக்கம் அனுன்மாவின் சொரூபமெனல்

அங்ஙனமாயின் துக்கமெதன் வடிவமெனின் அதனை அனுன்மாவின் சொரூபமென்று சொல்லுகின்றோம். மாயா காரியமான தேகம் இந்திரியம் அந்தக்கரணமுதலிய அனுன் மாக்கள் யாண்டும் அசத்து, சடமாயிருப்பதுடன் துக்க ரூபமாயிருப்பது எல்லோர்க்கும் வெளிப்படையாக விருத் தலின். "இதனை இதனின்றும் வேறென்றே துக்கமானது" என்றும் " குறைந்ததற் கானந்தான் குவலயந் தன்னி லில்லை" என்றும் அது விது மோகவடிவம் ஜடமானது முடிவுடையது அற்பமானது,, என்றும் சுறுதிகள் கூறுகின் றனமயால் என்க.

ஆன்ம வடிவ ஆனந்தமே விடயானந்தமெனல்

அவ்வாறு சுகம் ஆன்மாவின் வடிவமென்று பெறப்படும் போது அதை விடயசுகமென்று கூறுவது எவ்வாறு கூடு மெனின் கூறுகின்றோம்:— விடயஞ் சுகசாதன மென்று நெடுங்காலந் தொடர்ந்து வருகின்ற ஆசாவாசனைப் பழக் கத்தால் அவ் விடயத்தைச் சம்பாதித்தற் பொருட்டு விலக் கிய கருமங்களைவிடுத்து விதித்தகருமங்களில் அந்தக்கரணம்

வெளிமுகத்தில் தொழிற்பட்டு இலாப நட்டங்களில் கலக்கமடைந்து கொண்டு விடயத்தை இச்சிக்கும்போது இச்சை இராசோகுணமாதலால் சஞ்சலவடிவம் ஆதலின் இராசோ குணத்தோடுற்ற அந்தக்கரணத்தில் கலங்கிய நீரில் சந்திரபிரதிவிம்பம்போல் ஆன்ம சொரூபானந்தம் தோன்றுவதில்லை. புருடனுக்குப் புண்ணிய வசத்தால் விரும்பிய பொருள் எப்போது அடையப்படுகின்றதோ அப்போது சத்துவமான உண்முக அந்தக்கரணத்தில் தெளிந்த நீரில் சந்திரபிரதிவிம்பம்போல் ஆன்மானந்தம் பிரதிவிம்பித்து விளங்குகின்றது. இவ்வாறு விடய முன்னிலையில் விளங்குவதால் அது விடயானந்தமெனப்படுகின்றது.

இதனை அறிவானு மறிபொருளுங் கூடியகூட் டாவிலெழும் அறிவானந்தம், பிறியாத வான்மதத் துவத்தெ ழுந்ததா மதனைப்பேணல்செய்வாம். என்றும்,

இனியன வினிமை கொள்வா னிரண்டும்விட் டிவற்றி னூடே
தனிநிக ழினிமை நாடித் தற்பர மயமாய் நிற்பாய்.

இ-ள் சுவைகொள்ளுதற்குரிய அன்னபானாதிகளும் சுவைகொள்பவனும் ஆகிய இரண்டின் மத்தியிலிருப்பதாய் அந்தக்கருத்தா கருமங்களோடு கூடாததாய் ஒன்றாலும் வரம்பு பண்ணப்படாததாய் விளங்கும் இன்பாநுபவ ரூபமான பொருளைத் தியானிப்பவனாய் அப்பரமான்ம மயமாய் நிற்பாய் என்றும்,

நனிபல துய்ப்பான் றுய்ப்ப திரண்டுக்கு நடுவே தானே
அனிசம் பற்றின்றி நிற்கு மதுபற்றி யதனு ணிற்பாய்.

இ-ள். அனுபவிப்பவனும் அனுபவத்துக்குரிய மாதராதிகளும் ஆகிய இரண்டிற்கும் நடுவே எப்போதும் கருத்

தாகருமங்களோடு கூடாததாய் நிற்கும் அனுபவத்தைப் பற்றிக் கொண்டு அவ்வனுபவானந்த மயமாய் நிற்பாய் என்றும் வாசிட்டங் கூறுகின்றது. இவ்வாறு ஆன்மானந்தமே விடயானந்தமாயினும் விடயங்களில் அது ஏற்றத் தாழ்வாகவும் விளங்குகின்றது.

### விடயானந்த ஏற்றத் தாழ்விற்குக் காரணமும் அதன் பதினொரு வகை வேறுபாடுமே

ஆனந்த காரண புண்ணியங்களின் ஏற்றத்தாழ்வால் அந்தக் கரணத்துள்ள சத்துவ குணங்களுக்கு ஏற்றத் தாழ்வாம் அதனாலவற்றிலுண்டாகும் பிரதி விம்பங்களுக்கும் ஏற்றத்தாழ்வாம். அதனால் சுகங்களுக்கும் ஏற்றத் தாழ்வாம். இதனைச் சார்வபௌமன், (சக்கிரவர்த்தி) மனுட கந்தருவன், தேவகந்தருவன், பிதிரர், ஆஜானதேவர், கருமதேவர், முக்கியதேவர், இந்திரன், பிருகஸ்பதி, விராட்டு, இரணிய கருப்பன் என்ற இப்பதினொருவரும் சார்வபௌமன் தொடங்கி அன்னார் செய்த புண்ணியங்களின் ஏற்றத் தாழ்வால் ஒருவருக்கொருவர் நூறு நூறு மடங்கு அதிகமான விடய சுகத்தை யனுபவிக்கின்றனரென்று தைத்திரிய சுருதி கூறுகின்றது.

இச்சுருதியின் விளக்கப்பொருள்:—1வது, யௌவனம் திடகாத்திரம் கல்வியால் முதிர்ந்த அறிவு அழகு இவைகளையுடையவனைப் சதுரங்க சைனியங்களோடு பூலோக முழுவதுமாளுமரசன் சார்வ பௌம சக்கிரவர்த்தியாம். இவனே மனுடானந்தத்தின் முடிவை யடைந்தவன். 2வது, இக்கற்பத்திற் செய்த புண்ணிய விசேடத்தால் இக்கற்பத்திலேயே கந்தருவ பதவியை யடைந்தவன் மனுட கந்தருவன்

3வது, பூர்வ கற்பத்திற் செய்த புண்ணியத்தால் இக் கற்ப ஆரம்பத்தில் கந்தருவ பதவியை அடைந்தவன் தேவ கந்தருவன். 4வது, தமதுலகின்கண் நெடுங்காலம் வாசம் பண்ணுநின்ற அக்கினிஷ்வாத்தர் அர்யமா முதலியோர் பிதிரர். 5வது, இக்கற்பத்திறுதியிலேயே தேவரானவர் ஆஜான தேவர். 6வது, இக்கற்பத்தில் அசுவமேத முதலிய யாகங்களைச் செய்து அந்தப் புண்ணியத்தால் இக் கற்பத்தில் பெரும் பதவியை யடைந்து ஆஜான தேவரால் வழிபடப் பட்டோர் கரும தேவர். 7வது, அஷ்டவசுகள், துவாதசாதித்தியர், ஏகாதச ருத்திரர் இவர் முக்கியதேவர். 8வது, சர்வ தேவர்களுக்குந் தலைவன் இந்திரன். 9வது, சர்வ தேவர்களுக்கும், இந்திரனுக்கும் குரு பிரகஸ்பதி. 10வது, தூலமான பூத பௌதிகங்களுக்குத் தலைவரான பிரஜாபதி விராட்டு. 11வது, சமட்டிசூக்கும சரீரத் தலைவராய்ப் பிரமலோக வாசியான சதுர்முகப் பிரமதேவன் இரணிய கருப்பன் என்பது.

## விடயானந்தானுபவத்துக்குப் பரம்பரைக் காரணமும் நேர் காரணமும்

விடயானந்தானுபவத்துக்கு அதிர்ஷ்ட மென்னும் காரணமான புண்ணியங்களும், திருஷ்ட காரணங்களான மாலை, சந்தனாதி விடயங்களும் பரம்பரைக் காரணங்கள். அந்தக்கரணம் தமோகுணத்தாலாகும் விடயாகாரபரிணாமத்தையும் இரசோ குணத்தாலாகும் சஞ்சல ரூப பரிணாமத்தையும் விட்டுச் சுத்த சத்துவ குணரூப பரிணாமமுடையதாகத் தெளிந்திருப்பதே நேர் காரணம். இதனானன்றோ விடயங்களில் நிராசையுடைய புருடர்கள் மனத்தின்

வெளிமுக பரிணும எண்ணங்களை விடுத்து உண்முகமாயுதய மாகுஞ் சஞ்சலமற்ற சத்துவ விருத்தியில் வைராக்கிய சுகத்தை நேரே அனுபவிக்கின்றனர். நிராசையில்லாதவர்க்கும் அந்தக் கரணம் தொழிலாலுண்டான அயர்ச்சியை எவ்வளவுக்கெவ்வளவு விட்டு உண்முகத்திலோய்வை யடைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு நிஜானந்தம் விளங்குகின்றது. அவ்வானந்தத்தில் நிற்பவர்க்கு நாடிகள் சம நிலைப்பட்டு நோய் நீங்குவது கண்கூடாகையால் நோயாளிகளை ஓய்வாக இருக்கவேண்டுமென்று உலகில் மருத்துவர்கள் கூறுகின்றார்கள். இதனை "இவ்வானந்தத்தின் ஓர் அம்சத்தைப் பற்றிக்கொண்டு எல்லாப் பிராணிகளுஞ் சீவிக்கின்றன" என்று சுருதி கூறுகின்றது. இலட்சியத்தைப் பிளப்பதில் சர (பாண) ம் நேர் சாதனமும் வில் பரம்பரைச் சாதனமும் ஆவன போல ஆனந்தத்தின் நேர்சாதன பரம்பரைச் சாதனங்களை யறிக. விடயானந்தம் ஆன்மானந்தித்தின் அம்சமாகவிருந்தாலும் ஞானிகள் "கருநாய்த்தோலுள் பாலென வசுத்தமேவியது" என்று அதை விரும்பார்கள்.

விடயானந்தத்தை ஞானிகள் விரும்புவதில்லை யெனல்

காம நூலில் கூறும் ஆபாசமாகிய அற்ப விடயானந்தத்தை, பூரணனந்த அமிர்த ரசத்தைப் பருகுவதால் சீவன் முத்தரான ஞானிகளென்னும் மகான்கள் அபேட்சிப்பதில்லை.

ஆன்ம சொருபானந்தம் விளங்கக் காரணம்

அவ்வாறு ஆன்மா ஆனந்த வடிவ மாதலானும் பரிபூரணமாதலானும் எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லோர்க்கும் முயற்சியின்றித்தானே ஆன்ம சுகானுபவ முண்டாதல்

வேண்டுமெனின் அற்றன்று ஆன்ம சொரூபானந்த விளக்கத்துக்கு எண்ணங்களின் தூய்மையும் வேண்டப்படுதலான். எங்ஙனம் இரவில் பூரண சந்திரனுதய மாயிருப்பினும் அதனைக் கண்டு களிக்கக் கண்ணின் தூய்மை வேண்டப்படுகின்றதோ அங்ஙனமே ஆன்மானந்தானுபவத்துக்குப் புத்தியின் தூய்மை வேண்டப்படுகின்றது. இக்கருத்தைப் பற்றியே ஸ்ரீ பகவான் இடைவிடாது ஆன்மானு சந்தானம் பண்ணலாகிய தியானத்தால் ஏற்படும் புத்தியின் தெளிவென்னும் பிரசாதத்தா லுண்டாவது ஆன்மானந்தம் என்பதை "ஆத்ம புத்திப்ர ஸாதஜம்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

## ஆன்மானந்தத்தை விடயானந்தமென்றதற்குக் காரணம்

இவ்வாறு இடைவிடாது ஆன்மத் தியானம் பண்ணலால் அந்தக்கரணத்துள்ள இராசோகுண தமோகுணமாகிய சஞ்சல மூடங்களான மலினங்கள் போய்ச் சுத்த சத்துவ ஞானரூப அந்தக்கரணத்தில் தோன்ற யோக்கியமான ஆன்மானந்தமே விடயம் அடையப்படும் போது மனம் அசைவற்று நிற்கையில் புண்ணியத்தா லுதயமாகின்ற சத்துவ விருத்தியில் பிரதிவிம்பிக்கின்றது. ஆகையால் அதை விடயானந்தமென்று கூறுகின்றோம்.

## மந்தரும் விடயானந்தத்தை மகாவாக்கியப் பொருளாகத் துணிந்து மோட்ச மடைவாரெனல்

மந்தரும் இவ்விடயானந்தத்தி னுபாதியான அந்தக்கரணத்தின் சத்துவ விருத்திமுதல் உலகனைத்துமுண்மையல்ல கானலின் நீர்போன்றது என்று தள்ளிவிட்டு ஆனந்த மாத்திரத்தைச் சாமவேதத்தின் சாந்தோக்கிய வுபநிடதத்

துள்ள "தத்துவமசி" மகாவாக்கியத்தின் பொருளாய்ச் சீவேசுவரர்களின் ஐக்கியமான அகண்ட பரிபூரண சச்சிதானந்த அத்வைத பரமான்மாவாய் நிச்சயித்து அதுவே தமது சொரூபமென்று ஐயந்திரிபுகளின்றி அபரோட்சமாக அறிவாரேல் பிரமஞானிகளாய்ப் பிராரத்த கருமமுள்ளவரை உடம்போடிருந்து போகத்தால் அக்கருமம் முடிந்தவுடன் "சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி" யென்னும் மீண்டும் பிறவாத விதேக மோட்சத்தை யடைவார்கள். எவ்வாற்றாலும் தத்துவமறிந்த ஞானிகளே உத்தம புருடரென்றும், பகவத் பக்தரென்றும், குணாதீதரென்றும், பிரம்மணரென்றும் அதிவருணாச்சிரமிகளென்றும், ஜீவன் முத்தர்களென்றும் உபநிடதங்களில் ஆங்காங்குக் கூறப்படுகின்றனர். கடலில் வாயுவினால் தோன்றிய அலை, திவலை, குமிழியனைத்தையும் கடலாகவே காண்பதுபோல பரமான்மாவிடத்திலே மாயாவசத்தால் தோன்றிய சக, சீவ, பர மனைத்தையும் பரமான்மாவாகவேகண்டு உகை மயக்கத்தைவிட்டுத் தத்துவஞானிகள் அப்பரமான்மாவே தாமென்று சாந்தியடைகின்றனர் இச்சாந்தியே உத்தம புருடார்த்தம். அறமாதி மூன்றும் கௌணபுருடார்த்தங்களாம்.

விடயானந்த விளக்க நூற்பயன்

இந்த விடயானந்த விளக்கமென்னும் நூலை ஆசான் முன்னிலையில் அன்போடு ஒன்றுபட்டமனதுடனே நாடோறும் ஆராய்ச்சிசெய்து விடயானந்த வடிவமாய் விளங்கும் பரமான்மாவில் நிட்டையடைகின்றவர்கள் எவ்வாச்சிரமத்திலிருப்பவரேனும் அவர்கள் இடைப்பட்ட பயனாக அறமாதி மூன்றையும் முடிந்தபயனாக விதேக மோட்சத்தையும் அடைவார்கள்.

விடயானந்த விளக்கம் முற்றிற்று.

## பிழை திருத்தம்



| பக்கம் | | வரி | | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 7 | ... | 13 | ... | ஒல்லைமக் | — | ஒல்லைநம |
| 11 | ... | ,, | ... | விக்கண | — | விலக்கண |
| ,, | ... | 20 | ... | டுனைறுங் | — | டுணையும் |
| 12 | ... | 14 | ... | கா னுங | — | காணுங |
| ,, | ... | 15 | ... | துறங்கு | — | துறக்கு |
| 13 | ... | 10 | ... | தோனி | — | தோணி |
| 15 | ... | 9 | ... | மென்றும் | — | மென்னும் |
| ,, | ... | 23 | ... | நலலவர் | — | நல்லவர் |
| 17 | ... | 7 | ... | மறறொன் | — | மற்றொன் |
| 18 | ... | 13 | ... | சுபம் | — | சுயம் |
| 19 | ... | 14 | ... | உயாதி | — | உபாதி |
| 20 | ... | 19 | ... | தேசததின் | — | தேசத்தின் |
| ,, | ... | 21 | ... | அல்வது | — | அல்லது |
| 22 | ... | 17 | ... | விததலின் | — | விருத்தலின் |
| 26 | ... | 10 | ... | விம்மித்து | — | விம்பித்து |
| 28 | ... | ,, | ... | வசுகள் | — | வசுக்கள் |
| ,, | ... | 23 | ... | அந்தகக்ர | — | அந்தக்கர |
| 31 | ... | 4 | ... | திரியுக | — | திரிபுக |

# இந்நூலாசிரியர் இயற்றிய நூல்கள்

வேதசார சமுத்தரணமென்னும் தோடக வுரை

சிவ மகிமை பதவுரை விரிவுரை

கோயிலூர்க் குசுமாஞ்சலி

தருக்க சங்கிரக அன்னம்பட்டீய தெளிபொருள் விரிவுரை

ஈசான்ய ஞான தேசிகர்ச் சரித்திரம்

புருஷார்த்தப் பிரகரணம்

பண்டார்கர் ஸம்ஸ்கிருத முதற் புஸ்தக அப்பியாச மொழி பெயர்ப்புரை

சிவபுரி புராணம்

வன்னிகுல விளக்கம்

வல்லாள மகாராஜன் சரித்திர விள்க்கம்

ஆன்மானன்ம விவேகம்

சக்கர்தி கைலாச கணபதி ஆலய துதி

விடயானந்த விளக்கம்

---

கோயிலூர் பத்ததி என்னும் மந்திர மநோததிசாரம்
விரைவில் வெளிவரும்.

சம்ஸ்கிருத முதல் புஸ்தகம் அப்பியாசமொழிப்பெயர்ப்புரை
அச்சில் இருக்கிறது.

---

நாடார் பிரஸ், மதுரை.—47.